...ரத்னாகரம்

...வெள்ளியும் சனியுங்கூடி... அன்பு நல்ல ...செவியர்தம், புதனும் வியாழனும் வெள் ...முதன்மை செல்வம், புதனும் வியாழனும் சனி யுங்கூடில் தூர்த்தநடை, புதனும் சுக்கிரனுஞ்சனியுங் கூடில் கலகம் ச ...ப்பகை, வியாழனும் சுக்கிரனும் சனியுங்கூடில் தேகபலக்குறை ... குரூரசிந்தை துக்கம் இவையுண்டாம்

செவ்வாயுடன் புதனும் வியாழனும் சுக்கிரனுங்கூடில் சாந்தகுணம் சனப்பகை, புதனும் வியாழனும் சனியுங்கூடில் வறுமை, வியாழனும் சுக்கிரனும் சனியுங்கூடில் கெட்டதொழில் இவையுண்டாம்.

புதனும் வியாழனும் சுக்கிரனும் சனியும் ஓர்ராசியினிற்பின் வீரம் தேகவலிமை இவையுண்டாம்.

சூரியனும் சந்திரனும் செவ்வாயும் புதனும் வியாழனும் ஓர்ராசியி னிற்பின் கலகப்பிரியம், சூரியனும் சந்திரனும் செவ்வாயும் புதனும் சுக்கிரனும் ஓர்ராசியினிற்பின் இரக்கம் உதாரகுணம் பாக்கியம், சூரியனும் சந்திரனும் செவ்வாயும்புதனும் சனியும் ஓர்ராசியினிற்பின் புத்திரக்கேடு தாராசை அற்பாயு, சூரியனுஞ்சந்திரனும் செவ்வாயும் வியாழனும் சுக்கிரனும் ஓர்ராசியினிற்பின் இனசனவிரோதம். சூரியனுஞ்சந்திரனும் செவ்வாயும் வியாழனும் சனியும் ஓர்ராசியினிற்பின் களத்திரக்கேடு கண்ணோய், சூரியனும் சந்திரனும் செவ்வாயும்சுக்கிரனும் சனியும் ஓர்ராசியினிற்பின் தாராசை பித்ததேகம். சூரியனும் சந்திரனும் புதனும் வியாழனும் சுக்கிரனும் ஓர்ராசியினிற்பின் நற்புத்தி செல்வம் சேனாதிபத்தியம். சூரியனும் சந்திரனும் புதனும் வியாழனும் சனியும் ஓர்ராசியினிற்பின் பாவமுயற்சி. சூரியனும் சந்திரனும் புதனும் சுக்கிரனும் சனியும் ஓர்ராசியினிற்பின்வறுமை களவு, சூரியனும் சந்திரனும் வியாழனும் சுக்கிரனும் சனியும் ஓர்ராசியினிற்பின் நற்களத்திரப்பேறு சுத்தம் வித்தை. சூரியனும் செவ்வாயும் புதனும் வியாழனும் சுக்கிரனும் ஓர்ராசியினிற்பின் சேனாதிபதித்தன்மை தூர்த்தநடை. சூரியனும் செவ்வாயும் புதனும் வியாழனும் சனியும் ஓர்ராசியினிற்பின் பித்ததேகம் அழுக்குவஸ்திரந்தரித்தல். சூரியனும் செவ்வாயும் புதனும் சுக்கிரனும் சனியும ஓர்ராசியினிற்பின் பெருமை துக்கம் பாபமுயற்சி. சூரியனும் புதனும் வியாழனும் சுக்கிரனும் சனியும் ஓர்ராசியினிற்பின் தேவபத்தி அபிமானம் இவையுண்டாம்.

சந்திரனும் செவ்வாயும் புதனும் வியாழனும் சுக்கிரனும் ஓர்ராசியி னிற்பின் திரவியப்பேறு வம்சவிருத்தி நற்குணம். சந்திரனும் செவ்வாயும் புதனும் வியாழனுஞ்சனியும் ஓர்ராசியினிற்பின் வறுமை. சந்திரனுஞ் செவ்வாயும் புதனுஞ்சுக்கிரனுஞ்சனியும் ஓர்ராசியினிற்பின் பித்தம். சந்திரனுஞ்செவ்வாயும்வியாழனுஞ்சுக்கிரனுஞ்சனியும்ஓர்ராசியினிற்பின் உன்மத்தம். சந்திரனும்புதனும் வியாழனுஞ் சுக்கிரனுஞ்சனியும் ஓர்ராசியினிற்பின் அக்கப்பழுது. சந்திரனுஞ்செவ்வாயும்புதனும் வியாழனும் சுக்கிரனும் சனியும் ஓர்ராசியினிற்பின் விவேகம் இவையுண்டாம்

செவ்வாயும் புதனும் வியாழனும் வெ... பிற் களவு முண்டாம்.

எந்தக்கிரகங்களாயினும் ஐந்து அல்லது ஆறு... றபின் கீர்த்தியாதிநிலை தேசசஞ்சாரம் ஞானம் அ... யுண்டாம்.

## பன்னிருபாவதுக்கும்பலன்

### முதற்பாவப்பலன்

இலக்கினாதிபன் (சந்திரலக்கினாதிபனும்) பலக்கிரமமாய், சுபர்நோக்கப்பெற்று சுபரோடுகூடிச் சுபாம்சம்பெற்று, கேந்திரதிரிகோணங்களில் உச்சநட்பாட்சியமாய் நிற்பின் அக்கிரகதசைகளிலே சகலபாக்கியம் போகம் லாபம் கீர்த்தி தேகசுகம் முதலியநற்பலன்களுண்டாம். ஆறு எட்டு பன்னிரண்டு என்னுமிடங்களினிற்றல் பாவசம்பந்தமாய்நிற்றல் நீசம் அஸ்தமனம் பாவர்தானத்திருத்தல் பாவர்நடுவிலிருத்தல் பகைவீட்டிருத்தல் முதலியதீயநிலை அடையின் அவர்தசைகளிலே இராசபீடை சோரபயம் வறுமைதுக்கம் பெருநோய் சத்துருவாதை உலைவு முதலியதீயபலன்களுண்டாம். குருசுக்கிரர்கள் எப்பாவத்திலேனும் சரராசியில் அல்லது சராம்சகத்தில் அல்லது சரக்கிரகத்தோடு கூடிநிற்பின் வடிவழகு பலவிதமானசௌக்கியம் தூலசரீரம் சரீரபலம் இவையுண்டாம்.

இரண்டாமிடத்தோர் கூடின், சாத்விகவித்தையும் செவ்வாயோடு கூடிநிற்பின் பௌஷநூலாராய்வும் சங்கீதசிற்பங்களையும் வசனசாதுரியமும் ராசவசியமும் கௌரவமும் சனியோடுகூடிநிற்பின் நீதிவித்தையுணர்வும் சுக்கிரனோடு லக்கினத்து அல்லது நான்காமிடத்துநிற்பின் மூன்வயதிரசமும் ஒன்பதுபத்தாமதிபதிகள் பலவான்களாகி லக்கினத்துநிற்பின் வாழ்நாளளவுஞ்சுகானுபவமுமுண்டாம்.

### இரண்டாம்பாவபலன்

வாக்குத்தானாதிபனும் காரகனுங்கூடிக்கேந்திரகோணங்களினிற்பின், வித்தியாசாமர்த்தியமுண்டாம். சூரியனோடு அங்ஙனநிற்பின் வேதாந்தவித்தையும் வைத்தியப்பயிற்சியும் இரத்தினபரீக்ஷையும் உண்டாம், சந்திரனோடுநிற்பின் சூத்திரப்பிரயோகமுதலிய சாத்விகவித்தை உண்டாம். செவ்வாயோடுநிற்பின், தருக்கமுதலியதாமசவித்தையும் பாவஞ்சகம் மித்திரதுரோகம் பிரயக்கொலைமுதலியவிவாதவித்தையுமுண்டாம். புதனோடுநிற்பின், சுருதிஸ்மிருதியுணர்வும் சோதிடஞானமும் பரிகாசவாதமும் ஆகமநூலாராய்வும் சங்கீதசாமர்த்தியமும் சிற்பவுணர்வும் வாக்குவன்மையும் நிக்கிரகாநுக்கிரக சாமர்த்தியமும் உண்டாம். குருவோடுநிற்பின் வியாகரணவுணர்ச்சியும் வேதவேதாங்கப் பயிற்சியும் சிக்ஷாதிசாரமும் சனவசியமும் அடிமைவிருத்தியும் கீர்த்தியுமுண்டாம். சுக்கிரனோடுநிற்பின், காவியநாடகாலங்காரப்பயிற்சியும் ராசவசீகரமுமுண்டாம். சனியோடுநிற்பின் துர்ப்புத்தியும் துட்டகுணமும் சுபவர்க்கமேல்நிற்பின் தூர்த்தவியல்பும் புல்விறகுசுமத்தல் பயிர்செய்கை ஏவியசெய்தல் முதலியவுமுண்டாம். ராகுகேதுக்களோடுநிற்பின் விஷப்பிரயோகம் விஷவைத்தியம் இரகசியவித்தை உண்டாம், இரண்டாமிடம் கேந்திரகோண உச்சத்தானத்து சுபசம்பந்தமேவிநிற்பின் முகப்பொலிவும் நல்லகண்ணும் ரவிசெவ்வாயோடுநிற்பின் சிவந்தகண்ணும் சனியோடுநிற்பின் கபிலநிறக்கண்ணும் ராகுகேதுவோடுகூடி நிற்பின், பூனைக்கண்ணும் உண்டாம். இரண்டாமதிபன்

[illegible]யனுல் உப்பு உறைப்பு முதலிய உஷ்ணபதா
[illegible]தயிர் வெண்ணெய் மதுரப்பொருள் குளிர்ந்தபதா
[illegible]வாயனுல் கார்ப்பு கைப்பு, அற்பமுடானபதார்த்த
[illegible]வற்றிலும் புதனுல் கைப்பிலும் வியாழனுல் பல
[illegible]தினிப்பு விசித்திரமான உண்டி இவற்றிலும் சுக்கிரனுல் பால் தயிர் [illegible]னிப்பு பலவிதஉணவு இவற்றிலும் சனியாலுல் சோத்தான் சந்திலும் த[illegible]மபோசனத்திலும் ராகுகேதுவாலுல் உப்புறைப்புள்ள உஷ்ணபோசனத்தி[illegible]ம் பிரியமுண்டாம். இரண்டாமதிபனும் திரவியகாரகனும் உத்தமசுபவர்க்கமேனிற்பின் அவர்தசைகளில் பொன் வஸ்திரம் வாகனம் முதலியசித்தியும் இலக்கினதிபனும் இரண்டாதிபனும் காரகனும் பூரணபலமுடையராய் உ[illegible]ம்இடத்து நிற்பின் வெகுசெல்வமும் ஆறு எட்டு பன்னிரண்டாமிடங்களில் நிற்பின் அவர்தசையிலே திரவியசமும்கண்ணோயுமுண்டாம். சுபசம்பந்தமானுற் சுகமாம்.

வாக்குத்தானதிபனும் காரகனும் ஆறு எட்டு பன்னிரண்டில் பாவாம்சமேவிநிற்பின் ஊமையாம் இரண்டாதிபனும் குருவும் இரண்டில்நின்ருல் பாவசம்பந்தமாயிருப்பினும் திரவியவிருத்தியுண்டாம் இரண்டாதிபன் லாபத்தானத்திலும் லாபாதிபன் இரண்டிலுமாகநிற்பினும் இவ்விருவருங்கூடிக்கேந்திரத்தினிற்பினுங்குருவேயாடும்சுக்கிரனேடும் நிற்பினும் பாக்கியமித்தி யுண்டாம்.

மூன்றும்பாவபலன்

சகோதரஸ்தானதிபனும் சகோதரகாரகனும் நீசாஸ்தமனங்களாய் பாவவர்க்கமாய் அல்லது பாவரோடுகூடி அல்லது ஆறெட்டுப்பன்னிரண்டாமிடங்களில் நிற்பின் சகோதராரிஷ்டமுண்டாம். இவர்கள் சுபரோடுகூடிச் சுபவர்க்கத்துநிற்பின் வெகுசகோதரலாபமும் ஆபரணப்பேறும் பராக்கிரமமும் சத்துருவிசயமும் வஸ்திரலாபமும் ஆயுதவிருத்தியுமுண்டாம்

மூன்றுமிடம் ஆண்ராசியாக மூன்றுமிடத்ததிபனும் மூன்றுமிடத்துநிற்பனும் ஆண்கிரகமாக இவர் ஆண்ராசியம்சத்தில் நிற்க மூன்றுமிடத்தை, தானதிபனை, காரகனை, ஆண்கிரகம்நோக்க அமைந்தால் ஆண்சகோதரமும் பெண்ணானுற்பெண்சகோதரமும் இருதன்மையுங்கலந்திருப்பின், பலாபலநிச்சயப்படி தெரியப்படுஞ்சகோதரமுமுண்டாம்.

நான்காம்பாவபலன்

மாதிர்த்தானதிபனும் மாதிர்காரகனும் புதகுருசுக்கிரருடன் கேந்திரதிரிகோணதனலாப விக்கிரமத்தானங்களில் நிற்பின் மாதிர்சுகமும் மனேசயமும் சுகந்தவஸ்திராபரண சித்திரமண்டப சயன வாகனுதிலாபமும் உண்டாம். இவர்கள்பாபவர்க்கம் பகைநீசம் அஸ்தமனங்களாக ஆறு எட்டு பன்னிரண்டாமிடங்களிலேநிற்பின் அவ்வவர் தசாபுத்திகளிலே முற்சொல்லியபலன் விபரீதமாம். லக்கினதிபனும் பாக்கியாதிபனும் வாகனதிபனும் ஓரிடத்திலே சுபவர்க்கமேவிநிற்பின் சிங்காசனமேறும்பலமும் இவர்களொருவர்க்கொருவர் நண்பாய்மித்திரத்தானத்துச்சுபாம்சமேவின் யானை குதிரை முதலிய வாகனசித்தியும் அவரவர்தசாபுத்தி களிலுண்டாம்.

நான்காமதிபன் இலக்கினதிபனேடு அல்லதுசுபரோடு கேந்திரதிரிகோணங்களில், சுபாம்சமேவிநிற்பின் மாடமாளிகைச்சிறப்புண்டாம்.

ஐந்தாம்பாவபலன்

புத்திரத்தானதிபனும் புத்திரகாரகனும் லக்கினதிபனும் கேந்திர திரிகோணங்களிற் சுபாம்சமேவிநிற்பின் புத்திரமித்திரவிருத்தியும் இட்டசித்திப்பிராப்தியும்

மும், விசித்திரசாமர்த்தியமும் நல்லவசனமும், சாந்தமும், நிம்மார்க்கமும் விரதசீலமும் முதலியவுள்ள களத்திரமுண்டாம் ... னிருக்கிற்பின, பொன்னிறபாலை ... மும் சாத்துவிககுணமும் சுத்தமனமும் ... ... மும் மெய்யவழியாகும் மந்திரசித்தியும் புத்திர... ஜனசந்தோஷமும் சுகபோசனமும் முதலியவுள்ள களத்திரமுண்டாம். ... னிற்பின், கௌரவர்ணமான அழகியதாலசரீரமும் ராசதகுணமும் ... பாக்கியமும் நீலகேசமும் சிலேட்டுமோதிசமும் வெள்ளைவஸ்திரம் புஷ்பம் முத்து பால் முதலியவற்றிலே பிரியமும் அன்னதானவிருப்பமும் புருஷகேசமும் சுத்தமனமும் பார்ப்பதி இலக்குமி முதலியோரிஷ்டமும் வீணைவினோதமும் நாலாரச்சியும் புத்திரபௌத்திராதிவிருத்தியுமுதலியவுள்ள களத்திரமுண்டாம். சனியேழுநிற்பின, அழுக்கடைந்தசரீரமுடிவும மெலிந்த நீண்டதேகமும் பருத்தபல்லும் உரத்தகசமும் கருப்பீகேசமும் தாக்குணமும் துக்கவாழ்வும அபாசாரமும் விரண்டவாதமும் புருஷகோபமும் பத்திமித்திராதிவிரோதமும் பீடையும் பெருமையும் முதலியவுள்ள களத்திரமுண்டாம். ராகுகேதுக்களோடிற்பின. விஷப்பிரயோகமும் ...ரமும் தீர்த்தரமுமதுர்ப்போசனமும் முதலியவுள்ள களத்திரமுண்டாம். ஏழாமதிபன் நீசராசியல் அல்லது சத்துருராசியில் அஸ்தமனமாகவேனும் பாவவர்க்கமாகவேனும் பவபாவசம்பந்தமாகவேனுநிற்பினும், ஆறு எட்டு பன்னிரண்டிலேநிற்பினும் ஏழாமிடத்தில் அலிசகிரகநிற்பினும் களத்திரபீடையும் துக்கமும் இருதாரமும் ஏழாமிடத்திற்செவ்வாயும் சந்திரனுக்கேழில் சுக்கிரனும் எட்டாமிடத்தில் இலக்கினாதிபனு நிற்பின மூன்றுதாரமும உபயராசியிற் சுக்கிரனும உச்சராசியிற் (சுக்கிரனின்ற)ராசிநாதனும் பலமானதானத்திற் களத்திராதிபனும் நிற்பின் பெருதாரமுமுண்டாம்-

## எட்டாம்பாவபலன்

அட்டமாதிபனும் இலக்கினாதிபனும் பத்தாமதிபனும் ஆயுட்காரகனும்கேந்திரதிரிகோணலாபங்களிலே சுபாம்சமேவிநிற்பின் தீர்க்காயுளும், இவர்கள் பலவான்களும் பலவீனருமாக விரவிநிற்பின்மத்திமாயுளும் இவர்கள் பலவீனராகில் அதமாயுளும் உண்டாம்-ஆறு எட்டு பன்னிரண்டாமதிபர்மாறி, ஆறு எட்டு பன்னிரண்டில் நிற்பினும் அட்டமாதிபன் எட்டில்நிற்பினும் இலக்கினாதிபன் உச்சமாக, சந்திரன்பதினொன்றில்நிற்ப, வியாழன் எட்டில் நிற்பினும் தீர்க்காயுளுண்டாம். அட்டமாதிபனின்ற ராசிநாதனுடையமகாதசையில்அட்டமாதிபன்புத்தியிலும் சனிநின்ற ராசிநாதனுடைய மகாதசையிற் சனிபுத்தியிலும் கிரியாணமரணமாம. அட்டமாதிபனும் ஆயுட்காரகனும் சரராசியம்சங்களிலே நிற்பின் தேசாந்தரத்திலும், திரராசியம்சங்களிலேநிற்பின் சுயதேசத்திலும், உபயராசியம்சங்களிலே நிற்பின் வழிநடுவிலும் மரணமாம் எட்டில்நிற்பவன் சூரியனானால் வைத்தியத்தாலும்,சந்திரனால் அதிசாரவாத ரோகங்களாலும, செவ்வாயால் தாபசுரம் புண் முதலியவற்றாலும்,புதனாற்சுரத்தாலும் வியாழனாற் பெருகோயின்மியும், சுக்கிரனாற்சிலேட்டுமரோகத்தாலும், சனியால் வாதசுரத்தாலும்,ராகுகேதுக்களால் விஷசுரத்தாலும் மரமுதலியவற்றில்நின்றுவிழுதலாலும் மரணமாம்.

## ஒன்பதாம்பாவபலன்

பாக்கியத்தானாதிபனும் லக்கினாதிபனும் குருசுக்கிரரும் ஒன்பது நான்கு ஒன்றுமிடங்களிலே சுபாம்சமேவிநிற்பிற்பாக்கியவிருத்தியும் புண்ணியதானதருமசீலமும் பவபாவரோகேற்பினும் ஆறு எட்டு பன்னிரண்டில்நிற்பினும்தரி

திரமும் உண்டாம்.௯ல் பலவானகிய சூரியனோடுநிற்பின், ராசசேவையினாலும் ரத்தினபரீக்ஷையினாலும குதிரைமுதலிய வியாபாரத்தினாலும், சந்திரனோடுநிற்பின் வஸ்திர சுகந்தவஸ்து வியாபாரத்தினாலும் ராஜசன்மானத்தினாலும், செவ்வாயோடுநிற்பின் சேனாபத்தியத்தாலும் ஆயுதமுயற்சியினாலும், புதனோடுநிற்பின் மந்திரவாதம் சோதிடம் புரோகிதம் எனுமிவற்றாலும், குருவோடுநிற்பின் ராசபந்திரித்துவ மகாதானங்களாலும், சுக்கிரனோடுநிற்பின் ஸ்திரியினாலும், சனியோடுநிற்பின் ஏவலாலும், ராகுகேதுக்களோடுநிற்பின்ய வனதியராலும் திரவியசித்தி உண்டாம். சத்துருநீசாஸ்தமனங்களாகப் பாவாம்சமேவி நிற்பிற் குறித்தபலன்விபரீதமாம். ௯ம் அதிபன் நீசமாக ௪ ௧௦ல் செவ்வாயிருக்கிற் பிதாவுக்கு மரணமுண்டாம். ௯ம் அதிபன் உச்சமாக, சுக்கிரன் ௪ல் நிற்பின் பிதாவுக்குத்தீர்க்காயுவுண்டாம். ௯—௧௦—ம அதிபர்கள் இடமாறிநிற்பின் பிதாவுந்தானும் பாக்கியகீர்த்திமான்களாவர். ௯ம் அதிபனும் சூரியனும் ஸ்வபாட்சியுச்சமாகச்சுபாம்சமேவிநிற்பின்பிதிர்சுகமுண்டாம். உ—௯ம் அதிபர்கள் இடமாறிநிற்பினும் ௧—௯ம் அதிபர்கள் இடமாறிநிற்பினும் பின்வயதிலே கீர்த்தி பாக்கியம் வாகனசுகம் இவையுண்டாம்.

## பத்தாம்பாவபலன்

கருமத்தானாதிபனும் காரகனும் சந்திரனோடேனுஞ்சுக்கிரனோடேனும் பலவான்களாகிநிற்பின் யாகசித்தியும், ராகுகேதுக்களோடுநிற்பின் யாகவிக்கினமும், செவ்வாய்ச்சனியோடுநிற்பின் டம்பகருமமும், புதன்வியாழனோடுநிற்பின் நற்கருமமும் சனிசந்திரரோடுநிற்பின் பாவமுயற்சியும், சுபாம்சமேவிநிற்பின் கங்காஸ்நானாதிபுண்ணியகருமமுயற்சியும் சரராசியம்சத்துநிற்பின் சஞ்சாரமும் ஸ்திரராசியம்சத்துநிற்பின் சுயதேசமுயற்சியும் உபயராசியம்சத்துநிற்பிற்சுயதேச பரதேச முயற்சியும் நீசாம்சமேவில்நீசகருமமும் உண்டாம். ௧௦ அதிபர்கள் இடமாறிநிற்பினும் இருவருங்கூடிக்கேந்திரத்துநிற்பினும் சுகசிவனமுண்டாம். பிறவுமூகித்துணர்க.

## பதினோராம்பாவபலன்

லாபத்தானாதிபனும் காரகனும் சுபரோடு கேந்திர திரிகோணதனலாபங்களிற் சுபாம்சமேவி நிற்பின் அவர்தசைகளிலே லாபமுண்டாம். லாபத்தானத்துச் செவ்வாய் ஆட்சியாய்ச்சுபாம்சபலமுற்றுநிற்பின் அத்தசையில் நிதியலாபமுண்டாம். லாபத்தானாதிபனும் சகோதரத்தானாதிபனும் இடமாறிச் சுபாம்சமேவிநிற்பின் சகோதரவழியாற்பாக்கியலாபமுண்டாம். லாபாதிபன் உ—ம்அதிபனோடு இடமாறிற் களத்திரவழியாலே பாக்கியலாபமுண்டாம். இப்படியே பிதிர்மாதிர்வழிலாபமுதலியவும் ஆதித்தன்முதலியோரோடுகூடின் அவரவர் வேலைடக்கத்தக்க லாபமுமுண்டாம் என்று ஊகித்துணர்க,

## பன்னிரண்டாம்பாவபலன்

வியாதிபனும் சந்திரனும் சுபரோடு சுபபலமுற்றுக்கேந்திரதிரிகோண லாபங்களினிற்பின் கட்டில் மெத்தை வஸ்திரபோக போசனமுதலிய சுகமும், வியாதிபனும் லக்கினபனும் இடமாறினும் குருசுக்கிரரோடுகூடினும் தருமச்செலவும் சுபரோடும்பாவரோடுங்கூடில பின்வயதிற்சுகமும், பாவரோடுகூடில் தரித்திரமுங் கண்ணோவுந்துராசாரமுமுண்டாம். வியத்தானாதிபன் பாவனாகிப்பாவரோடு பாவாம்சத்தில்நிற்பினும் ௬உ—ல்பாவர்நிற்பினும் நரகப்பிராப்தியும், சுபனாகிச்சுபரோடு சுபாம்சத்தில்நிற்பினும் ௧உ—ல் சுபர் சுபாம்சமேவிநிற்பினும் சுவர்க்காதிபுண்ணியலோகப்பிராப்தியுமுண்டாம்.

வ் வொருபாவக்கங்களிலும் நின்றவரும் அவ்வப்பாவங்களுக்குரிய அதிபரும் அவ்வதிபருடன் கூடிநின்றவரும் காரகரும் நோக்கினவரும் ஆகிய இவர்களின் பலாபலத்தை ஆராய்ந்து அதன் பலனை நிச்சயித்துரைப்பது அறிஞர் கடனாம், தனித்தனி ஒவ்வொன்றையும் எடுத்துவிரித்துக்காட்டப்புகின் மிகவிரியுமாதலின் ஈண்டுச் சொல்லியவற்றை ஏதுவாகக்கொண்டு ஏனையவற்றையும் உய்த்துணர்க.

## ஷட்வர்க்கபலம்

இலக்கினத்தை ஆறுவகையாய்ப்பிரிப்பது ஷட்வர்க்கமெனவும் பத்துவகையாய்ப்பிரிப்பது தசவர்க்கமெனவும் பதினாறுவகையாய்ப்பிரிப்பது ஷோடசவர்க்கமெனவும் கொள்ளப்படும். இவற்றுள் இங்கே ஷட்வர்க்கம் உணர்த்தப்படும்.

இலக்கினம் ஓரை திரேக்காணம் நவாம்சம் துவாதசாம்சம் திரிம்சாம்சம் என இவ்வாறுவகையாகக்கொள்வது ஷட்வர்க்கமாம். இவற்றுள் இலக்கினமாவது சன்மலக்கினம் அல்லது கிரகநிலைலக்கினமாம். ஓரையாவது குறித்தலக்கினத்தை இரண்டு அம்சமாக்கி ஒற்றித்தராசியின் முற்கூறு சூரியாம்சமும் பிற்கூறு சந்திராம்சமுமாகவும், இரட்டித்தராசியின் முற்கூறு சந்திராம்சமும் பிற்கூறு சூரியாம்சமுமாகவும் கொள்ளப்படுவதாம். திரேக்காணமாவது குறித்தலக்கினத்தை மூன்று அம்சமாக்கி முதலம்சம் அவ்விலக்கினத்துக்கும் இரண்டாமம்சம் அதற்கு ஐந்தாமிராசிக்கும் மூன்றாமம்சம் ஒன்பதாமிராசிக்குமாகக்கொண்டு அவ்வவ்விராசிநாதரை நிச்சயித்துணர்ந்துகொள்ளப்படுவதாம். நவாம்சமாவது குறித்தலக்கினத்தை ஒன்பது அம்சமாக்கி மேடசிங்கதனுசுகளானால், மேடமுதல் ஒன்பது ராசியும் மிதுனதுலாகும்பங்களானால் துலாமுதல் ஒன்பது ராசியும், கடகவிருச்சிகமீனமானால் மிதுனமுதல் ௯ ராசியும் ஆக அவ்வவ்விராசிநாதரை நிச்சயித்துணர்ந்துகொள்ளப்படுவதாம். துவாதசாம்சமாவது குறித்தலக்கினத்தை ௧௨ அம்சமாக்கி அவ்விராசிமுதல் பன்னிரண்டுராசியும் சேரவைத்து, அவ்வவ்விராசிநாதரை நிச்சயித்துணர்ந்துகொள்ளப்படுவதாம். திரிம்சாம்சமாவது குறித்தலக்கினத்தை ௩௰ அம்சமாக்கி, ஒற்றித்தராசியில் ௫ ௫ ௮ ௭ ௫ எனவரும் அம்சங்களுக்கு முறையே செவ்வாய் சனி வியாழன் புதன் வெள்ளி என்பவர்கள் அதிபராகவும், இரட்டித்தராசிகளில் ௫ ௭ ௮ ௫ ௫ எனவரும் அம்சங்களுக்கு சுக்கிரன் புதன் வியாழன் சனி செவ்வாய் என்பவர்கள் அதிபராகவும் கொள்ளப்படுவதாம்.

இவற்றின்பலன் வருமாறு:—குறித்த அம்சாதிபதி சூரியனானால், ஐசுவரியம் போசனசுகம் கண்ணோய் சினேகம் சத்துருமிகுதி இராசபிரபுசேவை நினைத்தது முடித்தல் விவேகம் பித்தவலிமை பிறதேசத்தில்வசித்தல் தலைநோய் உஷ்ணரோகம் சுதேசபாஷையில்வல்லமை, சந்திரனால் விவேகம் சஞ்சலம் பகைக்குறைவு பிறர்மனமறிதல் செல்வம் விநோதசீலம், செவ்வாயால் சீக்கிரகோபம் கலகம் பூமிவிருத்தி தேககாந்தி பிறரைநம்பாமை வீரம் டளிப்பிலாமை சகோதரசுகம் தற்புகழ்ச்சி கல்வி, புதனால் எழுத்துவன்மை செல்வம் கல்வி நற்புத்தி வெள்ளைவஸ்திரப்பிரியம் ஆபரணப்பேறு பித்ததேகம் இனசனக்கூட்டம் பகுத்தறிதல் நினைத்தது முடித்தல், வியாழனால் மதுரவஸ்துக்களில் விருப்பு செல்வம் சிவந்தவஸ்திரத்தில்விருப்பு தேகசுகம் பெரியோருறவு தணிவு கருமம் சுகந்தவஸ்துவிலாசை போசனசுகம், சுக்கிரனால் அரும்பொருள்தேடல் அழகியதேகம் சுபம் நல்லவஸ்திரந்தரித்தல் தீர்க்காயு களத்திரசுகம் வாகனசுகம் பெண்பிள்ளைநேசம் ஆபரணப்பேறு, சனியால் வாதரோகம் அங்கவீனம் அற்பபுத்தி வேளாண்மைமுயற்சி பிறர்மனக்கவற்சி பாலியத்திற்பிதிர்பீடை விசாரம் என்னுமிப்பலன்களுண்டாம்.

கிரகாவஸ்தாபலன்

கிரகாவஸ்தாபலன்

அவஸ்தையாவது, அவ்வக்கிரகங்களின் ...ருவமாம். இது சாக்கிரதி தீப்தாதி பாலியாதி பிரகாசாதி ...ரவிதாதி ... என ஆறு வகைப்படும். அவைவருமாறு:—

சாக்கிராதிஅவஸ்தை

ஒவ்வொரு ராசிக்குமுரிய முப்பது பாகைகளையும் மும்மூன்றாகப் பகுக்கும் வழி ஒவ்வொருகூற்றிற்கும் பத்துப்பாகை வரும். ஒற்றைராசிகளுக்கு அம்மூன்றுகூற்றிற்கும் முறையே சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி என்றும் இரட்டித்தராசிகளுக்கு விபரீதமாக சுழுத்தி சொப்பனம் சாக்கிரம் என்றும் வழங்கப்படும்.

சனனகாலத்து ஒவ்வொருகிரகமும் எந்தஅவஸ்தைக்கூற்றில் நிற்கிறதென்றறிந்து சாக்கிரமாய் நின்றால் உத்தமபலமும் சொப்பனமாய் நின்றால் மத்திமபலமும் சுழுத்தியாய் நின்றால் அதமபலமுமாகக் கொள்க.

ராகு கேதுக்களுக்கு மூன்றுகூறுமுதல் எதிராகஒற்றித்தராசிகளுக்குச்சுழுத்தி முதலாகவும் இரட்டித்தராசிகளுக்குச்சாக்கிரமுதலாகவும் வழங்கப்படும்.

தீப்தாதிஅவஸ்தை

சனனகாலத்திலே கிரகங்கள் அத்தியுச்சமாயின் தீப்தமெனவும் உச்சமாயின் சுவஸ்தமெனவும் அதிமித்திரமாயின் முதிதமெனவும், மித்திரமாயின் சாந்தமெனவும்,சமமாயின் தீனமெனவும், சத்துருவாயின துக்கிதமெனவும், பாபசம்பந்தமாயின் விகலமெனவும், நீசமாயின் கலமெனவும், சூரியனோடுகூடின் கோபமென்வும்வழங்கப்படும்.

கிரகங்கள் தீப்தமாயின், ராச்சியப்பேறு அரசர்முதலியோரால் சன்மானம் திரவியப்பேறு வாகனசுகம் உற்சாகம் வீரம் களத்திரபுத்திரலாபம் இனசனமகிழ்ச்சி இவையுண்டாம்.

சுவஸ்தமாயின் தேகசுகம் அரசரால் உத்தியோகவிருத்தி திரவியப்பேறு வித்தை கீர்த்தி சந்தோஷம் தாரபுத்திரலாபம் பூமிவிருத்தி தருமவிருப்பம் இவையுண்டாம்.

முதிதமாயின் ஆபரணம் வஸ்திரம் வாகனம் சுகந்தத்திரவியப்பேறு தைரியம் தீர்த்தயாத்திரை சாத்திரக்கேள்வி தருமவிருப்பு இவையுண்டாம்

சாந்தமாயின், தேகசுகம் தருமவிருப்பு தாரபுத்திர வாகனலாபம் தருமசாத்திரங்களிலதிக அப்பியாசம்திரவியலாபம் ராசசன்மானம் இவையுண்டாம்

தீனமாயின் தானநஷ்டம் இனசனவிரோதம் எளியதொழிலால் சீவனம் பெரியோருடன்விரோதம் நோய் இவையுண்டாம்.

துக்கிதமாயின் பிறதேசவாசம் மனக்கிலேசம் இனசனக்

குறைவு ராசசோரம் அக்கினிபயம் இவையுண்டாம்.

விகலமாயின், எப்போதும் மனவிகாரம் கிலேசம் பந்துமரணம் க்ஷேத்திரபுத்திரபீடை சோரபயம் வஸ்திராபரண வாகனநஷ்டம் இவையுண்டாம்

...கலமாயின், பிதாமுதலியவர்களைப்பிரிதல் சனவிரோதம் சத்துரு... திரவியச்செலவு பூமிநாசம் இவையுண்டாம்

கோபமாயின், பாபகருமங்களில விருப்பு கோபமுள்ளவிருதை துய... வித்தைக்குறைவு தாரபுத்திரபந்துநாசம் கண்ணோய் திரவியச்செலவு இவையுண்டாம்

## பாலியாதியவஸ்தை

ஒவ்வொருராசிக்குமுரிய முப்பதுபாகையையும் ஐவ்வைந்துகூறாக்கிய வழி ஒவ்வொருகூற்றிற்கும் ஆறுபாகையாம் ஒற்றித்தராசிகளில் அந்த ஆறுகூற்றிற்கும் முறையே பாலியம் கௌமாரம் யௌவனம் விருத்தம் மரணம் எனவும் இரட்டித்தராசிகளில் விபரீதமாய் மரணம் விருத்தம் யௌவனம் கௌமாரம் பாலியம் எனவும் வழங்கப்படும்

சனனகாலத்து எந்த அவஸ்தையில் ஒவ்வொருகிரகமும் அமைகின்றதென்றறிந்து பாலியமாயின் அற்பபலமும் கௌமாரமாயின் மத்திமபலமும் யௌவனமாயின் அதிகபலமும் விருத்தமாயின் தீமையும் மரணமாயின் மரணகண்டமுமாகக்கொள்ளப்படும்

ராகுகேதுக்களுக்கு ஐந்தாங்கூறுமுதல் எதிராக(ஒற்றித்த ராசிகளுக்குமரணாதியும் இரட்டித்தராசிகளுக்குப் பாலியாதியுமாக) வழங்கப்படும்

## பிரவாசாதி அவஸ்தை

சனனகாலத்தின் முன்சென்ற நக்ஷத்திரத்தை அச்சுவினிமுதலாக எண்ணி அத்தொகையை அறுபதிற் பெருக்கி நிகழு நக்ஷத்திரத்துச் சென்றநாடியுங்கூட்டி நான்கிற் பெருக்கி நாற்பத்தைந்திற்பிரித்து வந்தசேடம் ஒன்றாயின் பிரவாசம் இரண்டாயின் நட்டம் மூன்றாயின் மிருதம் நான்காயின் செயம் ஐந்தாயின்சிரிப்பு ஆறாயின்ரதி ஏழாயின்சந்தோஷம் எட்டாயின் சுப்தம் ஒன்பதாயின் போசனம் பத்தாயின் சுரம் பதினொன்றாயின் கம்பம் பன்னிரண்டாயின் சுஸ்திதி எனவழங்கப்படும்

பன்னிரண்டின்மேற்படின் அத்தொகையைப் பன்னிரண்டாற்பிரித்து சேஷத்துக்கு இவ்வாறு அவஸ்தை கொள்க

பிரவாசமானால் பிறவிடத்தில்வசித்தலும், நஷ்டமானால் திரவியநாசமும், மிருதமானால் மரணபயமும் ஜயமானால் வெற்றியும் சிரிப்பானால் வேசியர்போகமும் இரதியானால் சுகப்பிரியமும் சந்தோஷமானால் சுபமும் சுப்தமானால் நித்திரையும் நோயும் வறுமையும் போசனமானால் பயமும் சுரமானால் அதிகஞானதேகமும் கம்பிதமானால்கேடும்

...லஜிதமானால் ...பமுமுலண்டாம்

...ஜிதாதியவஸ்தாபலம்

கிரகங்கள் உச்சம் அல்லது திரிகோண ...நிற்பின் கர்விதம் எனவும் ...க்ஷேத்திரத்து மித்திருடன் ...டி அல்லது நோக்கப்பட்டு அல்லது குருவுடன்கூடிநிற்பின் முதிதமெனவும் ஐந்தாமிடத்துப்பாபக்கிரகங்களோடு கூடிநிற்பின் லச்ஜிதமெனவும் சத்துருவீட்டிற் சத்துருக்கிரகத்தோடுகூடி அல்லது பார்க்கப்பட்டு அல்லது சனியோடு கூடிநிற்பின் க்ஷுபிதமெனவும் நான்காமிடத்து,சத்துருக்கிரகத்தால் பார்க்கப்பெற்று,சுபர்நோக்கின்றிநிற்பின்,திருஷிதமெனவும் சூரியனோடு கூடிப் பாபக்கிரகநோக்கம் பெற்று நிற்பின், க்ஷோபிதமெனவும் வழங்கப்படும்.

கிரகங்கள் கர்விதமானால் புதுவீடுகட்டல் நந்தனவனம்வைத்தல் ராசாதிகாரம் சாத்திரக்கேள்வி திரவியப்பேறு வியாபாரவிருத்தி இவையுண்டாம்

முதிதமானால், விசாலமானவீட்டில் வாழுதல் பூமிவிருத்தி பெண்களாற்சுகம் இனக்கொண்டாட்டம் ராசமாளிகையிற் சஞ்சரித்தல் சத்துருவெற்றி விவேகபுத்தி கல்வி இவையுண்டாம்.

லச்ஜிதமானால், சுரதப்பிரியம் விளையாட்டுவிருப்பு விவேகக்குறைவு புத்திரர்க்குப்பீடை பலனின்றிப்பிரயாணஞ்செய்து உலைதல் பாபகருமங்களில் விருப்பு இவையுண்டாம்.

க்ஷோபிதமானால், வறுமை கெட்டபுத்தி தீமை திரவியச்செலவு காலில்நோய் அரசர்கோபத்தால் நட்டம் இவையுண்டாம்.

க்ஷுபிதமானால் சோகம் மனவாட்டம் பரிவாரநாசம் பயம் சத்துருக்களால்வாதை திரவியநாசம் தேகபலக்குறைவு இவையுண்டாம்.

திருஷிதமானால், போகத்தாலே தீமை கெட்டமுயற்சியிற்பிரியம் தம்மவரால்பொருட்சேதம் ஒடுங்கியதேகம் மானக்குறைவு துக்கம் இவையுண்டாம்

சயனாதிஅவஸ்தை

அவஸ்தை அறியவேண்டிய கிரகம் (சூரியன்முதல்) எத்தனையாவதென்றும் அந்தக்கிரகத்திற்கும் நட்சத்திரம் அசுவினிமுதல் எத்தனையாவதென்றுமறிந்து,வந்த நட்சத்திரத்தொகையைக் கிரகத்தொகையாலேபெருக்கி வந்ததைக் கிரகநின்றராசியி னிகழும் அம்சம் எத்தனையாவதென்றுகண்டு வந்ததொகையாலே பெருக்கி அசுவினிமுதல் சென்றநக்ஷத்திரம் வரையெண்ணி வந்ததொகையையும் மேடமுதல் உதயலக்கினம்வரையெண்ணிவந்த தொகையையும் உதயாதிநாடித்தொகையையுங்கூட்டிப் பன்னிரண்டாற்பிரித்து வந்தசேடம் ஒன்றாயின் சயனம் இரண்டாயின் உபவேசம் மூன்றாயின் நேத்திரபாணி நான்காயின்பிரகா

ம் ஐந்தாயின் கமனம் ஆறாயின் ஆகமனும் ஏழாயின் சபாவாசம் எட்டாயின் ஆகமம் ஒன்பதாயின் போசனம் பத்தாயின் நிருத்தலிப்சை பதினொன்றாயின் கௌதுகம் பன்னிரண்டாயின் நித்திரை எனவழங்கப்படும்.

சூரியபலன்

சூரியன் சயனமானால், உதராக்கினிமந்தரோய் பித்ததேகம் பெருங்கால் கோபம் அரையிலேதழும்பு நெஞ்சுநோய்இவையுண்டாம்.

உபவேசமானால், வறுமை பாரஞ்சுமத்தலில் வலிமை தர்க்கசாத்திரப்பயிற்சி வன்னெஞ்சு இவையுண்டாம்

நேத்திரபாணியானால் சந்தோஷசித்தம் ஆசாயுமறிவு பரோபகாரம் தேகவலிமை திரவியப்பேறு சுகம் அரசரால்உபசரிக்கப்படுதல்இவையுண்டாம்

பிரகாசமானால் உதாரகுணம் செல்வப்பேறு சபாப்பிரசங்கம் புண்ணியமுயற்சி வலிமை அழகு இவையுண்டாம்

கமனமானால் பிறர்விட்டில்வசித்தல் துக்கம் சோம்பல் புத்திக்குறைவு வறுமை பயம் கோபம் இவையுண்டாம்

ஆகமனமானால, பிறர்மனைவியரில்விருப்பு இனசனக்குறைவு பிறதேசசஞ்சரிப்பு ஆசை கெட்டமுயற்சி இவையுண்டாம்.

சபாவாசமானால் நன்மை பரோபகாரம் செல்வப்பேறு தேகவலிமை பெரியோருறவு ஆடையாபரணப்பேறு பூமிவிருத்தி இவையுண்டாம்

ஆகமமானால், சத்துருக்களால்வாதை சஞ்சலசித்தம் கெட்டமுயற்சி மெல்லியதேகம் தருமவெறுப்பு கர்வம் இவையுண்டாம்

போசனமானால், அங்கப்பொருத்து தலை இவற்றில்நோய் பெண்களாலே திரவியச்செலவு தேகபலக்குறைவு பொய்பேசுதல் அதிகபோசனம் வீண்வார்த்தைகேட்டல் துர்ப்புத்தி இவையுண்டாம்.

நிருத்தலிப்சையானால், பெரியோரால் புகழப்படுதல் கல்வி காவியசாத்திரப்பயிற்சி அரசராற்புகழப்படுதல் இவையுண்டாம்.

கௌதுகமானால் சந்தோஷம் நல்லறிவு யாகாதிசற்கரும முயற்சி அரசராலுத்தியோகப்பேறு காவியவல்லமை இவையுண்டாம்.

நித்திரையானால், அதிகநித்திரை நித்திரைகொண்டாற்கண்சிவத்தல் பிறதேசவாசம் களத்திரக்கேடு வறுமை இவையுண்டாம்

சந்திரபலன்

சந்திரன் சயனமானால்அபிமானம் குளிர்ச்சியானபொருளில்விருப்பு பெண்ணாசை வறுமை இவையுண்டாம்.

உபவேசமானால் நோய் மந்தபுத்தி கெட்டமுயற்சிவிருப்பு வறுமை

பிறர்பொருள்விருப்பு வீண்முயற்சி இவையுண்டாம்

நேத்திரபாணியானால், நோய் வீண்வார்த்தைபேசல் காயம் கெட்டமுயற்சியில்விருப்பு இவையுண்டாம்.

பிரகாசமானால், லோகப்பிரசித்தி நற்குணம் முதன்மை வாகனசுகம் திரவியப்பேறு பெண்களாற்சுகானுபவம் தீர்த்தயாத்திரை இவையுண்டாம்.

கமனமானால், கெட்டமுயற்சி கண்ணோய் பயம் இவையுண்டாம்

ஆகமனமானால், அபிமானம் கால்நோய் பாபமுயற்சி வறுமை துக்கம் இவையுண்டாம்.

சபாவாசமானால், புகழ் ராசசன்மானம் அழகு பரத்தையர்போகம் சந்தோஷம் இவையுண்டாம்.

ஆகமமானால்,வாக்குவல்லமை தருமம் (அபரபக்ஷமாயின் இருதாரப்பேறு நோய் பொய் கெட்டதொழில் இவையுண்டாம்.

போசனமானால், அபிமானம் வாகன புத்திர களத்திர சுபம் (அபரபக்ஷமானால்,சுபக்குறைவு இவையுண்டாம்.

நிருத்தலிப்சையானால், தேகபலம் சங்கீதசாமர்த்தியம் சுவையறிதல் (அபரபக்ஷமாயின் பாபமுயற்சி இவையுண்டாம்

கௌதுகமானால், முதன்மை திரவியப்பேறு கணிகையர்போகம் லீலாவிநோதம் இவையுண்டாம்.

நித்திரையானால், பெண்வழியானதிரவியச்செலவு சிவாலய நிந்தை வியாழனுடன் கூடில்நற்பலன் இவையுண்டாம்.

## செவ்வாய்பலம்

செவ்வாய் சயனமானால், தேகத்தில்மறு அல்லது சொறி படர்தாமரைநோய் இவையுண்டாம்.

உபவேசமானால், தேகவலிமை பாபமுயற்சி பொய் வீண்செய்கை செல்வம் இவையுண்டாம்.

நேத்திரபாணியாய் லக்கினத்துநிற்பின், வறுமை மற்றைஇடங்களினிற்பின் கிராமாதிபத்தியம் இவையுண்டாம்.

பிரகாசமானால்' புகழ் நற்குணம் ராசசன்மானம் (ஐந்தாமிடத்துநிற்பின் புத்திரச்சேதம் ராகுவோடுகூடிநிற்பின் மரத்தினின்றுவிழுதல் இவையுண்டாம்.

கமனமானால், தேகவிரணம் படர்தாமரைநோய் சொறி பெண்ணாற்கலகம் பூமிநஷ்டம் இவையுண்டாம்.

ஆகமனமானால் நற்குணம் ரத்நாபரணப்பேறு சாஸ்திரப் பரீக்ஷை வாகனசுகம் சத்துருசயம் தன்னைச்சேர்ந்தவர்களைக் காத்தல் இவையுண்டாம்

சபாவாசமாய் உச்சஸ்தானத்து நிற்பின், யுத்தமுயற்சி தருமம் திரவியப்பேறு திரிகோணஸ்தானத்துநிற்பின் வித்தைக்குறைவு பன்னிரண்டாமிடத்துநிற்பின் தாரபுத்திரமித்திர நாசம் மற்றைஇடங்களில்

றபின், ராசசன்மானம் திரவியப்பேறு அபிமானம் கொடை இவை யுண்டாம்.
ஆகமமானல்,பாபமுயற்சி ஆயுதவிரணம் சாதுநோப் ... சினேகி தம் இவையுண்டாம்
போசனமாய்ப்பலமுற்று உதயத்திநின்றால் இட்டபோசனம் ஏ... டங்களினின்றால், கெட்டதொழில் அபிமானமில்லாமை இவையு... டாம்.
நிருத்தலிப்சையானல் இலக்குமிவிலாசம் ராசசினேகம் சுவர்ண ர த்தினதிலாபம் வீடுகட்டிவித்தல் இவையுண்டாம்.
கௌதுகமானல்,இன்சனவிருத்தி புத்திரப்பேறு (உச்சமானல் ராச மாளிகையில்வசித்தல் பெரியோராற்புகழ் இவையுண்டாம்
நித்திரையானல்,கோபம் புத்திக்குறைவு வறுமை காமம் ஆயுதவிரண ம் பாபமுயற்சி இவையுண்டாம்.

புதபலன்

புதன் சயனமாய் உதயத்திநிற்பின் அங்கக்குறள் சிவந்தகண் (ஏ னையிடங்களினிற்பின் வறுமை காமவிகாரம்இவையுண்டாம்
உபவேசமானல், நற்குணம் சுபர்கூடின் அல்லது நோக்கின் திர வியப்பேறு பாபர்கூடின் அல்லதுநோக்கின் வறுமை இவையுண்டாம்

நேத்திரபாணியாய் ஐந்தாமிடத்திநிற்பின்,புத்திரகளத்திர சுகக்குறை வு பெண்சந்தானவிருத்தி முதன்மை அரசர்வீட்டில்வசித்தல் (ஏனை யிடத்திநிற்பின் வித்தைநட்டம் துக்கம் மந்தபுத்தி இவையுண்டாம்.

பிரகாசமானல்,கொடை இரக்கம் புண்ணியமுயற்சி கல்வி கீழோ ரைக்கண்டித்தல் இவையுண்டாம.
கமனம் ஆகமனமானல்,ராசமாளிகையில் வசித்தல் இலக்குமிவிலா சம் நல்லறிவு இவையுண்டாம்.
சபாவாசமானல்,சபைமுயற்சியால்,திரவியப்பேறு புண்ணிய முயற்சி ராசாதிகாரம் சிவவிட்டுணுபத்தி மோக்ஷப்பேறு இவையுண்டாம்.
ஆகமமானல்,கீழோரைச்சேவித்துச் சீவனம்பண்ணுதல் இருபுத்திர ரையும் நல்லொருபுத்திரியையும்பெறுதல் இவையுண்டாம்.
போசனமானல்,கலகத்தாற்பொருட்செலவு ராசதண்டனை சஞ்சலசித் தம் தேகமெலிவு தாரசுகமின்மை உலகியல்வெறுப்பு இவையுண்டாம்

நிருத்தலிப்சையாய்ச்சுபருடன்கூடில் மதிப்பு வாகனசுபம் பவளமு தலியரத்தினலாபம் மித்திரபுத்திராதிவிருத்தி சபாப்பிரசங்கம் பாபருட ன்கூடில் வறுமை இவையுண்டாம்.
கௌதுகமாய் உதயத்திநிற்பின் சங்கீதசாமர்த்தியம் ஏழெட்டாமிட த்திநிற்பின் கணிகைபர்போகம் சுபக்ஷேத்திரத்திநிற்பின் புண்ணியசி

ந்தை ளென்முயற்சி பாபசேஷத்திரந்துமிறப்பின் தீமை இவை...

சித்திரையானல்,நித்திரைச்சுகமில்லாமை நோய் தேகவாட்டம் ...ப்பகுதி ...னைப்பகை திரவியநட்டம் களத்திரக்கேடு இவையுண்டாம்.

வியாழபலன்

வியாழன் சயனமானல் தேகவலிமை மென்குரல் பெருந்தகை நெடியகனவும் சத்துருபயம் இவையுண்டாம்

உபவேசமானல் வாக்குவல்லபம் கர்வம் ராசனைப்போலும் முதன்மை சத்துருபயம் கால் முகம் கைஇவைகளில் விரணம் இவையுண்டாம்.

நேத்திரபாணியானல்,நோய் செல்வம் சங்கீதபிரியம் காமம் பொன்னிறவடிவு விசித்திரவஸ்திரவில்விருப்பு இவையுண்டாம்

பிரகாசமானல், நல்லஆனந்தகுணம் சுகம் சபாநிஷ்டூரம் தேகத்தில் ஒளி உச்சமாயின்லோகாதிகாரம் பெருஞ்செல்வம் இவையுண்டாம்

கமனமானல்,காரியவீரவு இனசனமுடைமை கல்வி செல்வப்பேறு வேதாகமவுணர்ச்சி இவையுண்டாம்

ஆகமனமானல்,இனசனக்கூட்டம் உத்தமதாரப்பேறு விட்டுணுபத்தி பேராசை மாடமாளிகைச்சிறப்பு இவையுண்டாம்.

சபாவாசமானல், கல்வி வாக்குவல்லமை ரத்தினபரணப்பேறு சபைப்பொலிவு வாகனசுகம் பெரியோர்ப்புகழ்ச்சி இவையுண்டாம்.

ஆகமமானல்,சிவிகைமுதலியவாகனப்பேறு சுகம் களத்திர புத்திரபந்துசனசுகம் அடிமைவிருத்தி கல்வி ராசசன்மானம் சந்தோஷசித்தம் காவியவினோதம் மதிப்பு நன்மை இவையுண்டாம்

போசனமானல் போசனசுகம் இலக்குமிவிலாசம் வாகனப்பேறு இவையுண்டாம்.

நிருத்தலிப்சையானல் ராசசன்மானம் செல்வம் தேவபத்தி தருமம் உபாயபுத்தி கல்வி இலக்கணப்பயிற்சி இவையுண்டாம்.

கௌதுகமானல்,சந்தோஷம் செல்வப்பேறு குலமுதன்மை இரக்கம் சுகம் சபைச்சாதுரியம் சற்புத்திரப்பேறு இவையுண்டாம்.

நித்திரையானல்,கெட்டதொழிலில்விருப்பு வறுமை பாபமுயற்சி இவையுண்டாம்.

சுக்கிரபலன்

சுக்கிரன் சயனமானல், தேகபலம் தந்தரோகம் அபிமானம் வறுமை ஸ்திரீயோகம் இவையுண்டாம்.

உபவேசமானல், சுவர்ண ரத்தினபரண லாபம் தேகசுகம் ராசசன்மானம் சத்துருசயம் இவையுண்டாம்.

...நேத்திரபாணியாய் ஒன்றரை பத்து மூன்று இடங்களில் பின் க...ண்ணிலே மறு ஒளி இடங்களில் பின் விசாலமான ...த்தல் இவையுண்டாம்.

பிரகாசமானால், காரியவல்லமை வாகனசுகம் ராசசன்மானம் இவையு...ண்டாம்.

கமனமானால் பாலியத்தில் மாதிர்பிடை சத்துருக்களாலே சனங்களோ...டு வெறுப்பு இவையுண்டாம்.

ஆகமனமானால், செல்வம் உற்சாகம் தீர்த்தயாத்திரை கால்களில் வியாதிநோய் இவையுண்டாம்.

சபாவாசமானால் ராசசபாப்பிரவேசம் நற்குணம் சத்துருசயம வாகனப்பேறு கொடை இவையுண்டாம்.

ஆகமமானால், பொருள்வரவு சத்துருநாசம் புத்திரச்சேதம் நோய் அனுபவக்குறைவு இவையுண்டாம்.

போசனமானால், திரவியப்பேறு நல்லறிவு இவையுண்டாம்.

நிருத்தலிப்சையானால் காவியவல்லமை சந்தோஷசித்தம் தேசப்பிரியம் தருமமுயற்சி செல்வம். இவையுண்டாம்.

கௌதுகமானால் அதிகாரம் சபையிலே மதிப்பு கல்வி செல்வம் இவையுண்டாம்.

நித்திரையானால், சேவித்தலாற்சீவனம் பிறரை நிந்தித்தல் பகைவருக்கஞ்சுதல் வாக்குவல்லபம் பிறதேசம்போயலைதல் இவையுண்டாம்.

## சனிபலன்

சனிசயனமானால், பசி தாகம் இளைப்பு பாலியத்தில் நோய் பின்வயதிற்சுகம் இவையுண்டாம்

உபவேசமானால், தீயமுயற்சி அபிமானம் துட்டராலும் அரசராலும் பகைவராலும் துயர் இவையுண்டாம்

நேத்திரபாணியானால், இலக்குமிவிலாசம் அரசராலே நன்மை சந்தோஷசித்தம் ...புவார்த்தை கல்வி இவையுண்டாம்

பிரகாசமானால், இரக்கம் சிவபத்தி கிராமாதிகாரம் திரவியப்பேறு விநோதபுத்தி இவையுண்டாம்

கமனமானால் பெருஞ்செல்வம் சந்தோஷம் தீமை சத்துருக்களது பூமியை அபகரித்தல் ராசசபையிற் கல்விமானாயிருத்தல் இவையுண்டாம்

ஆகமனமானால் காலிலே ஆயுதவிரணம் புத்திர களத்திர சுகக்குறைவு கீழோரோடு சிநேகம் துக்கம் உலைதல் இவையுண்டாம்

சபாவாசமானால், சுவர்ணரத்தினபாஷணாதிகளாற்சுகம் நீதி அழகு இவையுண்டாம்

ஆகமமானால் ஆயுதவிரணம் பாதகம் காமம் இவையுண்டாம்

போசனமானால் அறுசுவையுடன் கூடியபோசனம் மந்தமானகண்

மயக்கம் ...ம் இவையுண்டாம்.

...ருத்த லிப்சையாயின், தருமசிந்தை திரவியப்பேறு அரசரா...படுதல் திடம் வீரம் இவையுண்டாம்.

கௌதுகமானால், பூமிவிருத்தி திரவியப்பேறு அதிகசுகம் அ...கம் கல்விவிருத்தி இவையுண்டாம்.

நித்திரையானால், திரவியப்பேறு நல்லொழுக்கம் நற்குண...மை பகையரைவெல்லுதல் கணிகையர்போகம் இவையுண்டாம்.

ராகுபலன்

ராகு சயனமாய் மேடம் இடபம் மிதுனம் கன்னி என்னுமிராசிகளிலேயிருப்பின், தனதானியவிருத்தியும் ஏனையிராசிகளிலிருப்பின், மனக்கிலேசமுமுண்டாம்.

உபவேசமானால், பட்டாமரைநோய் அரசருறவு மானம் திரவியச்செலவு இவையுண்டாம்.

நேத்திரபாணியானால், கண்ணோய் திரவியச்செலவு விஷசோர...த்துருபயம் இவையுண்டாம்.

பிரகாசமானால், சுகர்சனத்திருக்கல் கவிவல்லமை திரவியமுதன்மை உபாயகுணம் நல்லறிவு தானியபசுலாபம் ராசாதிகாரம் கீர்த்தி பெரு...மை தடாகாதிகளைப்புதிதாயமைத்தல் பிறதேசத்தில்மகிமை இவையுண்டாம்.

கமனமானால், பலபுத்திரரைப்பெறுதல் கல்வி திரவியவரவு கொடை ராசசன்மானம் இவையுண்டாம்.

ஆகமனமானால், கோபம் வறுமை புத்தியின்மை அழுக்காறு இவையுண்டாம்.

சபாவாசமானால், கல்வி லோபம் நற்குணம் திரவியத்தாற்சுகம் இவையுண்டாம்.

ஆகமமானால், மனவியாகுலம் சத்துருக்களால் இனசனவிரோ...திரவியச்செலவு ஓங்கியதேகம் பொய் இவையுண்டாம்.

போசனமானால், அற்பபோசனம் நூலாராய்வின்மை மந்தபுத்தி க...ரியங்களிற் பிரவேசிக்கும்போதுபயம் தாரபுத்திரசுகக்குறைவு இவையுண்டாம்.

நிருத்தலிப்சையானால், பெருநோய் நேத்திரரோகம் சத்துருபய... திரவியச்செலவு தருமவெறுப்பு இவையுண்டாம்.

கௌதுகமானால், பிறர்பொருள்விருப்பு இடமாறுதல் பரதாரசே...ம் இவையுண்டாம்.

நித்திரையானால் நற்குணம் பூமிவிருத்தி அழகு புத்திரப்பேறு ...டம் செல்வம் கர்வம் இவையுண்டாம்.

கேதுபலன்

கேது சயனமாய் மேடம் இடபம் மிதுனம் கன்னி என்னுமிரா...களிலிருப்பின் செல்வம், ஏனையிடங்களிலிருப்பின் நோய் இவையுண்டாம்.

[?]மானால், படர்தாமரைநோய் சத்துருவாதை [?]சசோரவி
[?]பயம் இவையுண்டாம்.
நேத்திரபாணியானால், கண்ணோய் விஷசர்ப்பபயம் சத்துருவாதை
இவையுண்டாம்.
[?]காசமானால், திரவியப்பேறு தருமசிந்தை பிறர்வீட்டில் வசித்தல்
[?]ரகம் நற்குணம் ராசசேவை இவையுண்டாம்.
[?]கமனமானால், வெகுபுத்திரப்பேறு பெருஞ்செல்வம் நல்லறிவு கொ
டை முதன்மை இவையுண்டாம்.
ஆகமனமானால், நோயினாற் பொருட்செலவு பல்நோய் கோள் பிறரை
நிந்தித்தல் இவையுண்டாம்.
சபாவாசமானால், வாக்குவல்லமை கர்வம் ஆசை இவையுண்டாம்.
ஆகமமானால், பாபமுயற்சி இனசனப்பகை நோய் கெட்டமுயற்சி
இவையுண்டாம்.
போசனமானால், பசி தரித்திரம் நோய் பிறதேசத்திற்போய் உலைத
ல் இவையுண்டாம்.
நிருத்தலிப்சையானால், நோய் விவேகம் கெட்டமுயற்சி காமம் பகை
வருக்கஞ்சாமை இவையுண்டாம்.
கௌதுகமானால், சந்தோஷம் இடப்பெயர்ச்சி துராசாரம் நிருத்த
த்திலும் ஸ்திரீபோகத்திலும்பிரியம் வறுமை இவையுண்டாம்.
நித்திரையானால், தனதானியசுகம் நன்முயற்சியாலே பொழுதுபோ
க்குதல் இவையுண்டாம்.

## விசேஷவிதி

பாபக்கிரகங்கள் நித்திராவஸ்தையாய் பாபர்நோக்கின்றி எழாமிடத்துநிற்பினும் சயனாவஸ்தையாய் ஐந்தாமிடத்துநிற்பினும் விசேஷ சுபபலமுண்டாம். பாபக்கிரகம் நித்திராவஸ்தை அல்லது சயனாவஸ்தையாய் எட்டாமிடத்துநிற்பின் மரணயாம். கிரகங்கள் இலக்கினாதிபாவங்களில் நன்மைபாயமையின் அவ்வப்பாவத்தால் வரும் பலன சுபமும், தீமையாயமையின் தீமையுமாம். கிரகபலன்கள் அவ்வமகாதசாபுத்திஅந்தரங்களில் விசேஷமாகநிகழும்.

## சாதகரத்நாகரம் முற்றுப்பெற்றது.

[illegible] ।
[illegible] ॥
ஶுபமஸ்து



# சோதிடவிலாசயந்திர விளம்பரம்.

இவ்வியந்திரம் யாழ்ப்பாணத்து வடமராட்சியிலுள்ள தும்பைநகரில், அக்கிரகாரவீதியில், எங்களாற் புதிதாக அமைப்பிக்கப்பட்ட சாலையிற்றாபிக்கப்பட்டிருக்கின்றது; இதிலே சமஸ்கிருதத்திலும் தமிழிலுமுள்ள சோதிடநூல்களும் பஞ்சாங்கமும் மற்றுநூல்களும்பிரசுரிக்கப்படும். குறித்த இரண்டு பாஷைகளிலே புத்தகங்கள் பத்திரங்கள் அச்சிடுவிக்கவிரும்புவோர்க்குச் சகாயமாக அச்சிடுவித்தும், கட்டுவேலைநடத்தியும் கொடுக்கப்படும். பிறவூரிலிருப்பவர் விபரந்தெரியவேண்டில் கடிதமூலமாய் அறிந்து நடத்துக.

நமதயலூரிலுள்ள புண்ணியசீலப்பிரபுக்களுட்சிலர் இவ்வச்சியந்திரசாலைக்கட்டிடத்திற்குவேண்டிய கல் மரம் நீறு உபகரித்திருக்கின்றார்கள்; சிலர் அச்சியந்திரத்திற்கு ரொக்கப்பொருளுபகரித்திருக்கின்றார்கள்; சிலர்வாக்குப்பண்ணிவிட்டார்கள்; இவர்கள்பெயரைப்பின்னொருபுத்தகத்தில்வெளியிடுவோம். நாம் குறித்த காலவெல்லையுள் சென்னையிலிருந்து அச்சுபகரணங்கள் வந்துசேராமையினால், கைவசத்துள்ளவற்றைக்கொண்டு இப்புத்தகத்தைநிறைவேற்றி வெளியிட்டோம்.

இங்ஙனம்

ம. முத்துக்குமாரஸ்வாமிக்குருக்கள்

சு. சுப்பிரமணியசாஸ்திரிகள்

# புத்தக விக்கிரய விளம்பரம்.



## இப்புத்தகத்தை விலைக்குவாங்கவிரும்புவோர்

இவ்வியந்திரசாலையிலும், பருத்தித்துறை சு. செவிநோமாக் காயநடையாலசரக்குக்கடையிலும், வல்லை வெடியகாடு சி. முத்துச்சுவாமிச் சோதிடரிடத்திலும், நெல்லியடிச் சைவவித்தியாசாலை உபாத்தியாயர் க. மயில்வாகனபிள்ளையிடத்திலும், சுவிண்டில் வித்தியாசாலை உபாத்தியாயர் க. மயில்வாகனபிள்ளையிடத்திலும், அச்சுவேலி மு. வே. சதாசிவக்குருக்களிடத்திலும், யாழ்ப்பாணம் வண்ணார்பண்ணை சவுக்கடை ஆ. தம்பாபிள்ளையிடத்திலும், வட்டுக்கோட்டை தொல்புரம் சைவவித்தியாசாலையுபாத்தியாயர் க. கந்தையாபிள்ளையிடத்திலும், மானிப்பாய் சுதுமலை ச. பொன்னுச்சாமிஐயரிடத்திலும், மன்னார் பெரியகடை வே. சுப்பிரமணியபிள்ளையிடத்திலும், முல்லைத்தீவு வீ. செல்லப்பாச்செட்டியாரிடத்திலும், திரிகோணமலை வில்லூன்றி த. குமாரசுவாமிஐயரிடத்திலும், மட்டுக்களப்பு மெத்தைக்கடை சே. மயில்வாகனம்பிள்ளையிடத்திலும், அநுராதபுரம் அபின்கடை ச. சிற்றம்பலபிள்ளையிடத்திலும் குருநாகல் கதிரேசன்கோவிற் பூசகர் ச. சபாபதிஐயரிடத்திலும் கொழும்பு செட்டித்தெருப்பிள்ளையார்கோவிற்பூசகர் பா. குமாரஸ்வாமிக்குருக்களிடத்திலும், ஷெ ஊர் செக்கடித்தெரு 8 ம் நெம்பர் வே. தக்ஷிணாமூர்த்தியிடத்திலும் கண்டி கொழும்புரோட்டு 214 ம் நெம்பர் க. சி. கந்தையினாரிடத்திலும் மேற்படியூர் புகையிலைக்கடை த. சிதம்பரப்பிள்ளையிடத்திலும், கம்பளை புகையிலைக்கடை த. பரமுப்பிள்ளையிடத்திலும், தொப்பிதோட்டம். மு. த. ச. முத்திரைக்கடையிலும், அம்பாந்தோட்டை புகையிலைக்கடை ச. அம்பலவாணபிள்ளையிடத்திலும், வதுளை 527 ம் நெம்பர் சுருட்டுக்கடை அ. சங்கரப்பிள்ளையிடத்திலும், பெற்றுக்கொள்ளலாம்.

இதன்விலை சதம் ௫௦. தொகையாக வாங்குவோர்க்கு, பத்துக்கொன்று கம்மிஷன் கொடுக்கப்படும்.

